உ

# அழகனார் திருவுலா



பாவாக்கம்:

காப்பியக் கவிஞர் நா. மீனவன்



வெளியீடு

திருவண்ணாமலை ஆதீனம்

குன்றக்குடி - 630 206






உ

சிவமயம்

# அடிகளார் திருவுலா

குன்றக்குடி

திருவண்ணாமலை ஆதீனம்

46 ஆவது குருமகாசன்னிதானம்

திருவருள்திரு தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிக

பரமாசாரிய சுவாமிகள்

அவர்களால்

*12-9-2003 ஆதீனக் குருபூசை விழாவில்*

*வெளியிடப்பெற்றது.*

பாவாக்கம் :

காப்பியக் கவிஞர் நா. மீனவன்

வெளியீடு :

*திருவண்ணாமலை ஆதீனம்*

*குன்றக்குடி - 630 206*

சிவகங்கை மாவட்டம்

முதற்பதிப்பு : 12–9–2003
திருவள்ளுவராண்டு 2034 ஆவணி 26

படிகள் : 1000

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம்,
குன்றக்குடி – 630 206,
சிவகங்கை மாவட்டம்.



உ

சிவ சிவ

"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே"

தவத்திரு
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
தொ.பே : 04577- 264227
- 264466

நாள் : 4-9-2003

## மகிழ்வுரை

"அடிகளார் திருவுலா" என்ற அருமையான அன்புப் பாமாலையை நமது குருமகாசன்னிதானம் திருவடிமலர்களுக்கு, காப்பியக் கவிஞர். மீனவன் அவர்கள் சூட்டியுள்ளார். உணர்வால் சிந்தையும் மனமும் ஒன்றுபட்டுப் பாடிய அற்புதப் பாமாலை. எளிய, இனிய, அழகிய அன்புத் தமிழில் பாடிய இக்கவிமாலையை, குருபூசை நன்னாளில் மகாசன்னிதானத்தின் திருவடிக் கமலங்களுக்குக் காணிக்கையாக்குவதில் பெருமகிழ்வு கொள்கின்றோம்.

-பொன்னம்பல அடிகளார்

உ

சிவமயம்

## காப்புச் செய்யுள்

குன்றக் குடியடிகள் கோதில் உலாப்பாடி
என்றும் சிறந்திருக்க எண்ணியே – நன்றாகப்
பாகனைய செந்தமிழால் பாடத் தொடங்கினேன்
தோகையடிப் பிள்ளை துணை.

# அடிகளார் திருவுலா

## நூல்

பைந்துழாய் மாலும் படர்கங்கைச் செம்பொருளும்
தந்த பெருவரத்தான், தாய்போல்வான் – வந்துலகில்

மோனத் தவவடிவாய் முன்எழுந்த நம்பெருமான்
ஞானமாம் தேர்செலுத்தும் நாயகன் – வான்அமரர்

போற்றித் துதிபாடும் புண்ணியஞ்செய் மாமுனிவன்
தோற்றப் பொலிவில் துலங்கெழிலான் – நாற்றிசையும்

செந்தமிழ்நல் மாரி செழிக்கும் உரையாக
வந்து பரிமளிக்கும் வண்ணத்தான் – முந்துதமிழ்ச்

சங்கத்துக் கீரன் சபையேறி வந்ததென
இங்குரைசெய் எங்கள் தமிழ்க்கோமான் – திங்கள்

சடையன் நுதல்விழியில் சார்ந்தபொறி ஆறாய்
மடைவழியே சென்று மலரின் – இடையமர்ந்து

கார்த்திகையார் தான்வளர்க்கக் கண்ணுதலான் தன்துணைவி
சேர்த்தணைக்க வந்துதித்த செவ்வேளை – ஆர்த்த

தமிழால் அருச்சிக்கும் தண்ணளியான் அன்பு
குமிழியிட நங்கள் குருவாய் – நமைக்காக்கப்

குன்றக் குடியமர்ந்த கோமான் திருமடத்தில்
நின்றோர் மகிழ்வால் நிறைந்திருக்க – என்றுமுள

செந்தமிழை ஆய்ந்து சிறந்த உரைபயின்று
சந்தத் தமிழ்ச்சுவையில் சார்ந்திருக்க – வந்திருப்போர் –

பொன்னார் திருமுகத்துப் புன்னகையைக் காணவென
முன்னால் தவங்கிடந்து முன்னேறி – பொன்னடிகாள்

வாழ்த்தருள்க என்று வரங்கிடந்து தன்சென்னி
தாழ்த்தி வணங்கும் தருணத்தில் – காழிநகர்ப்

## நீராடல் - அணிபுனைதல்

பிள்ளை தமிழ்க்குப் பெரிதும் மயங்குகின்ற
வள்ளல் எழுந்திங்கு வான்புனல்நீர் – வெள்ளம்

படிந்துதிரு மஞ்சனங்கள் பார்த்துப் பணிந்தோர்
மடியிருந்த காவிமடி நீட்ட – மடித்துடுத்திச்

சென்னியிலே தீக்கொழுந்து சேர்ந்தாற்போல் தான்விளங்க
மன்னுதலைப் பாகை மகிழ்ந்தணிந்து – தன்உளஞ்சேர் –

அண்ணா மலையான் அருச்சனைப்பூ பாகையிலே
நண்ணிக் கொலுவிருக்க நாலுபுறம் – எண்ணியே

வந்தோர் திருமுறைக்கு வள்ளலார் நெஞ்சுருகும்
சந்தமொழிச் சால்பழகர் சந்ததமும் – செந்தழலாய்

அன்றெழுந்த நன்மலையாம் அண்ணா மலையாரை
மன்றாடிப் போற்றி மகிழ்ந்தெழுந்து – நன்றறிவார்

பன்னீர் இலைசேர் பரமன் திருநீற்றைச்
சென்னி அணிந்து தினம்மகிழ்வார் – வன்னிகைத்

தாங்கும் பெருமானார் தந்த தமிழ்வாழ
ஏங்கும் சமுதாயம் ஏற்றமுற – ஆங்குவந்தோர்

அக்குவடம் மார்பில் அசைந்தாட வையத்தார்
பக்குவமாய் வாழ்வில் பழுத்திலங்கத் – தக்கபடி

மெய்காண மெய்கண்டார் மெய்யுரைக்கும் சித்தாந்த
மெய்ச்சைவம் காக்கின்ற மேன்மையினார் – கையசையக்

கண்டார் குறிப்பறிந்து காற்றாய் விரைந்தோடி
மண்டு பணிசெய் மடத்தடியார் – தண்டனிடப்

பத்துவிரல் மோதிரமும் பட்டின் மினுமினுப்பும்
எத்தாலும் தான்விரும்பா ஈசன்நிகர் – மெய்த்தவசி

## உடன் செல்வோர்

முன்னடக்க ஓதுவா மூர்த்திதமிழ்ப் பண்ணிசைக்க
மன்னும் மலைபோல் மதயானை – முன்னடக்கப்

பட்டுக் குடையும் பரிந்தசையும் சீர்ஆல
வட்டத் தனிக்கொடியும் வந்திலங்கத் – தொட்டாலே

தூய்மை துலங்கும் திருநீற்றுத் தோற்றத்தில்
வாய்மை விளங்க வருமடிகள் – வீயாத

செந்தமிழ்சொல் நால்வர்தமிழ், சேவேறும் நம்பெருமான்
சிந்தை மகிழவே சேர்கவெனச் – சந்தத்தால்

உள்ளம் உருகிடவே ஓதுவார் பண்ஓதி
வெள்ளமெனப் பின்னால் விரைந்துவரக் – கள்ளமிலார்

நெஞ்சில் கரவறியார் நின்மலத்தார் செய்யசிவன்
அஞ்செழுத்தை ஓதும் அருந்துறவி – கஞ்சமலர்க்

கைவிரித்து வாழ்த்தருளக் காண்சைவப் பேரரசு
பைவிரித்த நாகம் படமெடுக்க – மைவிரித்த

கண்ணாள் திருமேனி காதலால் பாதிகொண்ட
பண்ணாள் திருப்பரமன் பாதமலர் – மண்ணுலகில்

காக்கும் எனக்கண்டு கைகூப்பித் தன்னுடைய
வாக்கால் தமிழ்உலகை வாழ்வித்தோர் – ஆக்கமுறு

செய்யதமிழ் வாழச் சிறந்த வழிபாடும்
எய்யாத் தமிழாய் இருக்கட்டும் – மெய்யாகச்

செய்தால் பெருமானின் சிந்தை மகிழுமென
வையத்தில் சொன்னபெரு வள்ளலிவர் – நெய்யுண்ணும்

தீமுன் அமர்ந்து தினம்ஓதும் சொற்களால்
நாமென்ன தானறிந்தோம் நன்கறிக – ஆம்என்னில்

நெஞ்சுருக்கும் பாடல்களால் நின்மலனை நாம்வணங்க
அஞ்செழுத்தான் தான்மகிழ்வான் ஆதலினால் – பஞ்சடியாள்

பாகத்தான் முன்னர்நாம் பாடுவோம் செந்தமிழால்
ஆகம் மகிழ அருச்சிப்போம் – ஆகவே

வாரும்எனத் தானழைத்து வாழ்வித்தோர் இங்கிருக்கும்
ஊரெல்லாம் சென்று உரைசெய்த – பேராளர்

குன்றை மடத்துக் கொலுவாசல் முன்வாழைக்
கன்றுகளின் பக்கத்தில் காத்திருக்கும் – மன்றில்

வைகைத் தமிழ்பேச வந்தமர்ந்த சான்றோர்கள்
கைகுவித்துத் தான்வணங்கக் கண்டுமகிழ் – தோகைமயில்

கந்தன் அடிமறவாக் காதலுடன் நின்றுதொழும்
எந்தை அடிகள் இணைமலர்த்தாள் – சந்ததமும்

பட்டதால் தான்மகிழும் பாரதனைத் தன்னடிகள்
தொட்டுவரக் கண்டுதொழும் தூயவர்கள் – மட்டவிழும்

பூக்களினைத் தூவியவர் பொற்பாதம் தான்படவே
மாக்கோலம் இட்டார் மகளிரெலாம் – வாக்காலே

எங்கள் அடிகள்நீர் என்றென்றும் வாழ்கவென
இங்குரைத்தார் தென்தமிழர் ஈண்டுகண்ட – மங்காத்

தவப்புதையல் ஆன தமிழ்க்குறளை ஓதும்
சிவஞானச் செம்பொருளைச் சேரும் – தவஞான

மாமுனிவர் செய்யதமிழ் மன்றத்தில் வந்தமரக்
கோமுனிவர் என்றிங்கே கொண்டாடும் – சாமிதமிழ்ச்

## கூடியோர் போற்றுதல்

சொல்லறிய நிற்பார்தம் சோதி முகம்பார்த்து
வெல்லரிய சொல்பேசும் வித்தகராய் – நல்ல

கருத்துரைப்பார் கேட்டோர் கரைகடந்த ஞானம்
பெருத்த கனிபோல்வார் பேச்சின் – பொருள்திறத்தை

மெச்சுவார் போற்றியே மெய்சிலிர்ப்பார் அக்கருத்தை
இச்சிப்பார் ஞானவிளக் கேற்றுவார் – அச்சுதனின்

காதல் மருகன் கவினார் திருமுருகன்
பாதமலர் தான்பணியும் பான்மையால் – சீதமனம்

வள்ளல் அடிகளுக்கே வாய்த்த திறம்என்பார்
தள்ளரிய ஞானத் தடங்கடலே – உள்ளமெலாம்

தேனார் குறளாய்த்தித் திக்கும் தமிழ்ப்பாகைத்
தானாய்ப் பெருகவிடும் தத்துவமே – வானிருந்து

கொட்டும் மழைபோல் குறள்மாரி பெய்கின்ற
பட்டை வயிரமெனப் பாலிப்பார் – மட்டில்லாத்

தண்கருணைச் சாமியெனத் தாள்பணிவார் முன்னிருந்து
தண்ணார் அடிக்கமலம் தான்காட்டி – மண்ணழகு

காணவந்த சாமியினைக் காதலால் கும்பிடுவார்
மாணடிகள் அந்த மரியாதை – பேணியவர்

வாழ்கவெனக் கைகாட்டி வந்தனங்கள் தான்ஏற்றுச்
சூழ்வார் தொடர்ந்துவரத் தூயதமிழ் – வாழ்கின்ற

குன்றைநகர் வீதியிலே கோலமணிப் பல்லக்கில்
நன்றமர்ந்து மன்னும் நகர்வலமாய் – வென்றுவர

## உலாவின் தொடக்கம்

எண்ணும் பெருமானும் ஏறினார் பல்லக்கு *
பண்ணோதும் வாணரெலாம் பாடிவர – விண்ணோர்

பூமாரி தான்பொழியக் கண்டு புலவோர்கள்
பாமாரி பெய்தார் பனிமலைசேர் – கோமான் –60

தனைக்கண்ட செய்ய கணங்களெனச் சிந்தை
நனைந்திடுவார் எங்களுக்கே நாளும் – வினையகல

வந்தீர் எனச்சொல்லி வாழ்த்துவார் நன்மையெலாம்
தந்தீர் எனச்சென்னி தாழ்த்துவார் – பந்தமெலாம்

நீக்கவந்த சாமிக்கே நித்தம் வணக்கமென்பார்
காக்கவந்த தெய்வக் காவலரே – மாக்கவலை

மாற்றவந்த எங்களது மாமுனியே என்றிடுவார்
சாற்றும் புகழுருவே சாமிஎன்பார் – மாற்றறியாப்

பொன்போல் ஒளிகாட்டும் போதகுரு என்றிடுவார்
அன்பர்க்குத் தாயே அவரென்பார் – மன்பதையில் –65

குன்றாக் குடிவாழக் கோமான் தமிழ்க்கந்தன்
மன்றாடிக் கொண்டுவந்த மாமுனிவர் – என்றுசிலர்

சொல்வார் இவருடைய பேச்சதனை யாரிங்கே
வெல்வார்கள் என்றே வினவுவார் – பல்வகைய

* (பல்லக்கில் பவனிவர மறுத்துத் தம் வாழ்நாளில் பல்லக்கில் ஏறியறியாத அடிகள் பெருமானைக் கவிஞர் தம் கற்பனையுலகில் பல்லக்கில் ஏற்றிப் பார்த்து மகிழ்கிறார் – வெளியீட்டாளர்)

சிந்தனைக்கே தானிடமாய்ச் சேர்ந்த பெருஞான
விந்தைபற்றி யாரே விளம்புவார் – சந்ததமும்

நாடெல்லாம் சென்று நலமுரைப்பார் தன்நலத்தை
நாடாமல் செல்வார் நமக்கெல்லாம் – தேடாமல்

தேடியே வந்த திரவியமே என்பார்கள்
தோடார் செவிப்பெருமான் தோன்றியருள் – பாடுபுகழ்

சேரும் கொடுங்குன்றம் சென்றுபணி சேவடியான்
பாரும்நீர் பாருமெனப் பாங்கிருப்பார் – சீருரைக்கச்

சூழ்ந்த அடியார்கள் சுற்றியே பாடநாம்
வாழ்ந்தோம் எனச்சொல்லி வந்துதலை – தாழ்த்துவார்

கோலத் தமிழ்க்குமரன் கொண்டுவந்த தூதர்மா
ஞாலத்தோர் வாழவே நாளுமிங்கு – சீலமுடன்

ஆற்றுபணி கண்டவர்கள் யார்தான் உரியநன்றி
சாற்றுவார் என்றிங்கே சாற்றுவார் – வேற்றுமொழி

சொல்லித் துதிப்பார்தம் சூழல் அறியாதே
வல்ல தமிழுக்கே வாழ்வளித்தோர் – நல்லபல

அண்ணல் அடியார் அடிக்கமலம் தான்தொழுதே
எண்ணற்றார் பின்தொடர ஏற்றமுடன் – வண்ணமலர்க்

காவித் தமிழ்முனியின் காலடிக்கே பூத்தூவிச்
சேவிப்பார் அந்தத் தெருச்சூழ்ந்தார் – தேவைநிகர்

குன்றாக் குடிமுனியின் கோலத்தைக் காணவென
நின்றார் வரிசையிலே நீள்புகழார் – நன்றாய

### மாணாக்கர்

கல்வி வயலில் கவின்பயிராய்த் தோன்றிவரும்
செல்வ மணிச்சிறார் சீர்பூத்த – நல்லநெறி

செல்லத் துடிக்கும் சிறப்பும் செழுந்தமிழ்ப்பண்
சொல்ல நினைக்கும் சுறுசுறுப்பும் – வெல்ல

மொழியால் விரும்புவார் தங்கள்மனம் போற்ற
மொழியும் திறத்தார்முன் னேற்ற – வழியில்

நடைபோடும் தன்மான நாயகர்கள் என்றே
எடைபோட மேலுயர்ந்தார் இந்தப் – படையோநல்

ஞானப் படையென்று தான்நவில்வார் நல்லதமிழ்
மோனைபோல் நிற்கும் முயற்சியினார் – வானேறிச்

செல்லும் முகில்களெனச் செல்வார்தம் பீடுகண்டு
சொல்லாயும் ஆசான்மார் சொன்னவைகள் – எல்லாமும்

நெஞ்சில் நிறுத்தி நினைப்பைச் செயலாக்கி
துஞ்சாத கண்ணராய்த் தோதறிந்தே – எஞ்சாமல்

கல்வித்தேன் மாந்தும் கவினார் இளஞ்சிறுவர்
பல்வித்தை தானறிந்த பாங்குடையார் – கல்வித்தாய்

எங்கள் அடிகளென எண்ணும் திருமனத்தார்
பொங்கு குறளுக்குப் புத்துரைகள் – எங்குமுளார்

போற்றிடவே செய்தஇவர் புண்ணியத்தை வாழ்த்துமெனச்
சாற்றி வணங்குமொரு சால்புடையார் – தோற்றப்

பொலிவார் அடிகளவர் பொற்பாதம் போற்றி
விலகாமல் நின்றங்கு வேண்டப் – பலகாலம்

## ஆசிரியர்

கற்றுச் சிறந்தார்நற் கல்விக் கரைகண்டார்
வற்றாத கல்விவளம் வாரியே – முற்றும்

பருகுமென முன்னிற்பார் பாசமிகு தாயாய்
அருகிருந்து நித்தமும் அன்பாய் – வருகவென

இங்கிதமாய்ச் சொல்லி எழுத்துடனே எண்ணுரைத்து
மங்காத ஞான மணிவிளக்கை – எங்கணும்

ஏற்றுவார் தன்னலத்தை என்றுமே தான்கருதார்
மாற்றுரைக்க வேண்டாத மாண்அறிஞர் – சாற்றுவன

எல்லாமும் நன்னெறியே என்பதன்றி வேறறியார்
பொல்லாங்கை எண்ணார் புறஞ்சொல்லார் – கல்லாரும்

கையெடுக்கும் நல்லாசான் கண்ணார்வெண் சுண்ணத்தைக்
கையெடுத்து வையமே காட்டுவார் – எய்யாத

பள்ளியெனும் கோட்டையினைப் பாலிக்கும் வேந்தராய்த்
துள்ளிவரும் சேயின் துடுக்கடக்கி – வள்ளலென

என்றுமிவண் கல்வித்தேர் எங்கும் அசைந்துவர
நின்று வடம்பிடிக்கும் நெஞ்சுடையார் – குன்றனைய

நற்குணத்தார் நாட்டின் நலங்காக்கும் பிள்ளைகளின்
சொற்கண்டு தான்மகிழ்வார் சோர்வில்லார் – நற்கலைகள்

எல்லாம் அறிந்தார் இவர்பெருமை எல்லாமும்
சொல்லில் அடங்காத சோதிஎன – வல்லார்

உரைக்கும் உயர்புகழின் சால்புடையார் நெஞ்சம்
கரைக்கின்ற சொல்லுடையார் கல்வி – உரத்தாலே

பிள்ளைகளின் நெஞ்சப் பெருவயலில் நெல்விதைப்பார்
வெள்ளத்தில் செல்லா வியன்கல்வி – உள்ளத்தால்

தான்கவரப் போகாத் தருக்குடையார் ஆனாலும்
ஏனென்று கேட்பார்கள் ஏற்போர்க்கு – வானமிழ்தை

ஊட்டலென ஊட்டுவார் உற்சாகம் ஊற்றெடுக்க
நாட்டுவார் ஆசிரியர் நற்குழாம் – தேட்டமுடன்

கும்பிட்டார் குன்றை அடிகள் குலங்காப்பார்
தெம்புடனே என்று திருவடியை – நம்பும்

## தொழிலாளர்

குடிவழியில் தோன்றிக் குவலயத்தைக் காக்கும்
படியிந்தப் பேருலகப் பந்து – மிடியிலே

சிக்காமல் வாழ்க்கை செழிப்பேறத் தானுழைப்பார்
எக்காலம் ஆனாலும் ஏற்றமுறும் – தக்கோர்

இவரின்றி வையம் இயங்காதிங் கென்பார்
தவறின்றிச் செல்வம் தருவார் – நவநிதியும்

கொண்டு குவிப்போர் குலைகுலையாய் நெல்விளையக்
கண்டுமுதல் காணும் கரிசனத்தார் – பண்டிரந்த

ஈசனுக்கும் தான்கொடுக்கும் ஈகை உழைப்பாளர்
நேசமுடன் மேதினியை நின்றுயர்த்தும் – பாசமனம்

மாறாத பண்பர் மடைவழிநீர் தான்பாயச்
சோறாக்கும் பேர்உழவர் சொர்க்கத்தைச் – சேற்றுவழி

காட்டும் கருணைக் களமர் வழிவந்தோர்
நாட்டுகிற நாற்றிங்கே நட்டெழுங்கால் – கூட்டுகிற

நெற்பொதியால் வான்நிலவை நின்றுதொடத் தான்குவிப்பார்
பற்பலவும் சொல்வதெவன் பாருயர்த்தும் – நற்பணியில்

ஈடுபட்ட ஏருழவர் இங்குள்ளார் மானமுடன்
ஆடைகட்டி வாழ்வதற்கே ஆர்வமுடன் – பாடுபட்டுச்

சீரியங்கும் பாபோலச் சிக்காமல் பாவிடையில்
போராடும் ஊடையினால் புத்துடைகள் – ஏராளம்

தந்தும் வளமில் தறிநெய்வோர் கூட்டமுடன்
விந்தைச் சுவையுடைய காய்கறிகள் – சந்தைக்கே

கொண்டுவரும் அன்பர் குலையாத பேருழைப்பால்
மண்டிவரும் தோட்டம் மலர்த்துவோர் – கண்டுலகம்

பாராட்ட இங்கு பலவாய் மரப்பொருள்கள்
சீராட்டித் தானீயும் சீருடையார் – தேர்முதலாய்ச்

சாமிக்கும் வாகனங்கள் சப்பரங்கள் செய்திடுவோர்
நாமிருக்க வீடு நலமாகத் – தாம்ஈவார்

செங்கல் நிறுத்திச் சிமிட்டிதான் பூசியே
இங்கிருப்பார் தானிருக்க இல்லத்தை – இங்களித்தோர்

நெய்த்தீபம் ஏற்றி நிழல்கொடுக்கும் தெய்வதத்தை
மெய்யாகக் காட்டியே மேதினியோர் – பொய்யகன்று –120

வாழத் துணைசெய்வார் வான்பொருள்சேர் ஆலயத்தில்
வாழும் தமிழ்சொல்லா வாயினார் – வாழா

வடமொழியில் போற்றி வழிபாடு செய்யும்
கடனாளர் வையத்தே காணும் – படியாய்ப்

பொருளனைத்தும் சேர்த்துப் புகலும் வணிகர்
திருக்கூட்டம் மேலும் திகழ்வார் – பெருவுலகில்

மக்கள் அடைய மலர்ந்த பொருளனைத்தும்
தக்கபடி தான்தருவார் தான்வணங்கிப் – பக்கமெலாம்

நின்று தொழுவார் நினைவால் அவர்பெருமை
என்றென்றும் பேசுவார் எப்புறமும் – குன்றைநகர்க் – 125

கந்தனது தாளைக் கனவிலுமே தான்வணங்கிச்
சந்ததமும் போற்றுகிற சால்பினார் – வந்தமரர்

துன்பங்கள் தீரவெனத் தோகை மயிலேறி
மன்பதையைச் சுற்றியருள் மால்மருகன் – பொன்பதித்த

அக்குவடம் பூண்ட அழகன் திருநெடுமால்
தக்கபுகழ்த் தங்கை தனியுமையாள் – மக்களிலே

பேரிளைஞன் பிள்ளைக்குப் பின்பிறந்தோன் வண்கடப்பந்
தாருடையன் தாரகனைத் தானழித்தோன் – சூரர்பகை

போயகல வந்திட்ட புண்ணியனைக் கார்த்திகையில்
தூய மனம்விளங்கத் தோள்பணிவார் – நேயமுடன்

தைப்பூச நாளோடு தண்ணார்ந்த பங்குனியில்
தப்பாத உத்தரத்தில் தான்மகிழ்ந்தே – எப்போதும்

பாற்குடங்கள் தூக்கிப் பரமன்மகன் பேர்பாடி
பாற்கடலில் தங்கமதி பார்ப்பதுபோல் – மேற்குமுகம்

பார்க்கின்ற சூரியனைப் பார்க்கும் திருமுகத்தைப்
பார்க்கின்ற பக்தர்குழாம் பக்கமெலாம் – வேர்த்தசைய

வண்ணமயில் காவடிகள் வான்தொட்டுத் தாவிவரக்
கண்ணுடைய தோகை கலந்தாடப் – பண்ணிசைக்கே

நின்றாடப் பார்ப்பார் நிதம்மகிழ்வார் வாழ்வருள்க
என்றடிகள் தம்மருளை இச்சிப்போர் – மன்றேறிச்

## தமிழ்ச் சான்றோர்

செந்தமிழைப் பேசியே சிந்தை குளிர்விக்கும்
சந்தத் தமிழறிந்த சால்புடையார் – விந்தியமும்

தாண்டியே வெற்றிகொண்ட மாவேந்தர் மேருவரை
ஆண்ட சிறப்பை அகம்புறமாய் – ஈண்டளிக்கும்

சங்கத் தமிழைச் சபையேற்றித் தான்களித்தோர்
திங்கள் முடியணிந்த தென்னாடன் – நங்கள்சிவன்

பாரில் வளர்த்த பசுந்தமிழை கோப்புடைய
சீரில் தளையசையச் சேர்ந்திட்ட – பாரப்

பெருங்கவியில் நெஞ்சமது பித்தானோர் மேலும்
வருங்கவியும் இவ்வுலகில் வாழ – விரும்பியே

முச்சங்கம் கண்ட முதற்கடவுள் ஈசனென்பான்
பச்சைமால் தங்கை பதியானோன் – மெச்சுதமிழ்

ஈண்டுயர வேட்டே இறையன் பொருள்நூலை
ஈண்டெழுதித் தந்தான் இதனாலே – பாண்டியனும்

மெத்த மகிழ்வடைந்தான் மேலாம் உரைகாண
வைத்திட்ட நக்கீரன் வாயிருந்து – புத்துரைகள்

ஆகப் புறப்பட்ட ஆன்றதமிழ் தானுணர்ந்தோர்
மேகமெனச் செந்தமிழ் மேடைகளில் – வேகமுடன்

வாதாடும் சான்றோர் வான்கவிதை தேர்புலவோர்
தீதில் புராணம் தெரிந்துரைப்போர் – சீதமலர்

தெய்வத் திருமுறைகள் தேர்ந்தறிந்த ஞானியர்கள்
உய்யவழி காட்டும் உயர்கோவை – வையகத்தில்

மாசகற்றும் ஈசன்மணி வாசகங்கள் மற்றுமிறை
நேசத்தைத் தான்வளர்க்கும் நித்திலமாம் – தேசுடைய

பன்னிரண்டு தேவாரம் பண்டறிந்தோர் கந்தனது
பன்னிரண்டு தோளுக்கும் பாமாலை – சொன்ன

அருணகிரி சந்தம் அதில்திளைத்த நல்லோர்
திருவருளை வேட்கும் திருவார் – பெரும்பக்தர்

தேனமரும் பூவாலே தெய்வத் திருத்தமிழை
வானுறையும் ஈசன் வழங்கினான் – ஆனவரை

நாமதனைப் போற்றி நாளுமவர்க் காளாவோம்
ஏமமுறக் காப்போம் எனவிசைப்பார் – சோமனையே

## மகளிர்

சென்னிதனில் வைத்த சிவபெருமான் தாள்போற்றிப்
பன்னுதமிழ் பாடிப் பரவசத்தால் – முன்னுருகித்

தன்னிளமை நீக்கித் தனிப்பேயாய்த் தான்எழுந்த
அன்னைதிருக் காரைக்கால் அம்மையினைத் – தன்னுடைய

தாயாய்க் கருதியே தான்போற்றும் கங்கையான்
சேயை மறவாத சிந்தையினார் – வேயனைய

தோள்கொண்ட மங்கையர்கள் தூயசுடர் தோன்றுமுனம்
வாள்விழியார் தம்மில்ல வாசல்வழி – தாள்சிவந்த

தாமரையாள் வந்துதன் தாள்பதிக்க வேண்டுமெனச்
சேமமுறக் கும்பிடுவார் சீர்வேலன் – நாமத்தை

ஓதி மலையேறி உள்ளம் மகிழ்ந்தார்ப்பச்
சீத முகம்நோக்கும் செவ்விதழார் – வாதுபுரி

நக்கீரன் சொல்லாறு நற்படைநூல் ஓதிமனம்
எக்காலும் தான்மகிழும் ஏந்திழையார் – தக்கபுகழ்

கொண்டு தனைக்கொண்டான் கோணாமல் போற்றுகிற
வண்டார் குழல்மாதர் வான்பிறையைக் – கண்டதுபோல்

தோன்றும் சிறுநுதலார் தோள்கிடத்தல் இன்பமென்றும்
ஆன்ற கனிவாய் அருங்குதலை – ஏன்றவரை

கேட்பதே இன்பமென்றும் கேட்டு மகிழ்வடையும்
வேட்கையுடன் தோள்சுமக்கும் விந்தையினார் – நாட்கணக்கில்

தன்னை அணிசெய்யும் தாமரைப்பூப் போல்முகத்தார்
சென்னி வணங்கிச் சிவந்தகை – முன்குவிய

எத்திசையும் பார்த்தபடி எக்காளம் சின்னங்கள்
சத்தமிடக் கைத்தாளம் சப்திக்க – முத்தமிழைப்

போற்றும் அடிகளார் பொற்பதத்தைக் கண்டுதொழ
மற்றவரும் தன்னை மதிக்கவந்தார் – கற்றபடி

நில்லாதார் வாய்மை நிலையாதார் தான்வாழ
நல்லவழி காணும் நலமுடையார் – பொல்லாத

வஞ்சமே மூலதனம் வாழ்விற்கே என்றுரைப்போர்
அஞ்சாத நெஞ்சர் அரசியலில் – பஞ்சாயம்

பேசியே பாதிப் பணம்கொள்வோர் தப்பியற்றக்
கூசாத பேர்வழிகள் கொள்கையெலாம் – காசாக்கும்

குள்ளநரிக் கூட்டங்கள் கோடானு கோடிகளை
அள்ளிக் குவிப்போர் அடுத்தார்க்குப் – பள்ளங்கள்

தோண்டும் கலைகற்ற தொண்டர் சுகமெல்லாம்
வேண்டும் மனத்தார் விதியாலே – மாண்டவன்மேல்

கட்சிக் கொடிபோர்த்திக் காசுபணம் சேர்ப்பார்ஓர்
அட்சரமும் கல்லார் அறிவில்லார் – முட்செடிபோல்

எங்கும் பரவி இருப்பார் இருந்தபடி
அங்கிங் கெனாதபடி ஆர்த்திடுவார்– தங்காமல்

கார்தொடரக் கண்டபடி சுற்றியே காசடிப்பார்
பார்காக்க வந்தோம் எனப்பேசி – ஊரடித்த

பேர்வழிகள் யார்வரினும் பின்செல்லா ஓர்துறவி
ஊர்வளர நல்லதொழில் உண்டாக்கி – யார்வரினும்

பாராட்டும் சாமியவர் பண்புகண்ட நற்பெரியார்
பாராட்டிக் கொண்டாடப் பார்த்ததுண்டு – மேருவைப்போல்

ஓங்கி உயர்ந்தோர்தம் உள்ளத்தைத் தானுணர்ந்தே
தாங்கும் அரசியலார் தான்வாழ்த்த – தூங்காமல்

வையத்தைச் சுற்றி வலம்வந்து வெற்றிகண்டும்
எய்யா அடிகள் இதயத்தே – மெய்யாய்

இடங்கொண்ட தோழராம் ஏழைத் தலைவர்
திடமான சீவாவின் நெஞ்சில் – இடங்கொண்டார்

பேர்மறவா அன்பரும் பேரறிஞர் அண்ணாவின்
சீர்மறவாக் காளையரும் செந்தமிழைச் – சார்ந்த

மறவர் கலைஞர்தமிழ் மாண்பைச் சுவைப்பார்,
திறத்துடனே ஆளுகின்ற திட்பத் – திறம்படைத்த

அம்மாவைச் சார்ந்தோர் அயராத நெஞ்சுடைய
செம்மைபடை வைகோ சிறப்புடனே – செம்மாந்த

ஆற்றலுடன் நாடாளும் ஆர்வமிகு பா.ஜ.க
தோற்றும் பொதுவுடைமைத் தோழருடன் – சாற்றுபுகழ்க்

காமராசர் கண்டபுகழ்க் காங்கிரசார் மேற்பலவாய்
நாமமுள்ள கட்சிகளின் நாயகரும் – சாமியவர்

பேருலாக் கண்டு பெரிதும் மகிழ்வடைந்தார்
சீருலாக் காண்பதுடன் சேரவந்து – ஓரணியாய்

## திருமடத்துப் பணியாளர்

மன்னும் அடிகளுக்கு மாதவத்தால் பின்தொடரும்
பொன்னம் பலமாம் புகழடிகள் – முன்னவர்போல்

வண்ணத் தமிழ்பேசும் வாயழகர் தன்னுடைய
எண்ணம் தமிழென்னும் ஏந்தலார் – விண்ணோர்

பதியாள் திருமுருகன் பாதம் துதிக்கும்
மதியாள் இளவரசாம் என்னும் – கதியான

ஐந்து திருக்கோவில் ஆளும் அதிபதிக்கு
முந்து பணிசெய்ய முன்வருவோர் – சிந்தைக்

குறிப்பறிந்து வேண்டுவன கொண்டியற்றும் நல்லோர்
உறுதிபடச் சாமிக்(கு) உதவி – நிறைகுடமாய்

நின்றும் இருந்துமுடன் நேர்காண வந்தோர்க்கும்
என்றும் உதவும் இயல்புடையார் – நன்றாய

செந்தமிழ் சேரும் சிவாகமப் பேரரங்கில்
சிந்தனை நந்தவனம் சேர்கின்ற – விந்தைத்

தமிழ்அரங்கில் வந்துரைசொல் தக்காரை என்றும்
அமுதமொழிச் சொல்லால் அகத்தைத் – தமதாக்கி

அண்ணா மலையை அடிகள் வணங்குகையில்
பண்ணோதித் தக்க பணிசெய்வார் – விண்ணிவந்து

நிற்கும் மலைமுருகன் நேரருளைத் தான்வேண்டி
பொற்குன்றம் ஏறியே போற்றுவார் – நற்குணத்தார்

பாசத்தி னோடு பயிற்றுவிக்க நம்மடிகள்
நேசமாய்க் கட்டுவித்த நேர்பள்ளி – ஆசான்மார்

கட்டளைத் தம்பிரான் காணவந்த அன்பர்களைத்
தொட்டழைத்துச் செல்லுகின்ற தூயவர்கள் – மட்டின்றி

எத்திசையும் கூடி இனிய துதிசெய்தார்
பத்தாம் தமிழ்ப்பாட்டும் பண்புக்கே – வித்தான

எட்டுத் தொகையும் இயலார் திருமுறையும்
வட்டித் தொகைபோல் வளர்க்கின்ற – கட்டிச்

91/1

சமர்த்தர் கனபேர் உடையவர்காண் நம்மை
அமர்த்தி அருளும் அடிகள் – நமக்காகப்

பண்ணிறைந்த செந்தமிழைப் பாலித்தோர் நெற்றியிலே
கண்ணிறைந்த சொக்கன் கவின்மதுரை – மண்ணாண்ட

சோதி மகனாகிச் சுந்தரமாய்த் தான்துலங்கும்
ஆதி மகனின் அடிமறவா – மாதவத்து –200

மாமுனியைச் சீர்குறளை மண்ணில் நிலைநாட்டும்
கோமுனியைக் கும்பிட்டுக் கோதில்லாப் – பூமழைகள்

தான்பொழியப் போற்றியே தாள்பணிந்தார் போகமுற
வான்பொழியும் மாரி வதனத்தால் – தான்காட்டும்

பட்டிமன்ற மாத்தலைவர் பைந்தமிழ் மேடைகளில்
கொட்டுமழைப் பேச்சாளர் கோதற்றார் – மட்டவிழும்

பூப்போல் பொலியும் புகழ்முகத்தார் கன்றதனை
ஆப்போலக் காக்கும் அருளாளர் – மாப்புனிதர்

வள்ளலாம் பாரிக்கு வானார் விழாக்கண்டோர்
அள்ளிப் பெருநிதியம் அங்களித்தோர் – புள்ளிமயில்

தேரேறும் மாமுருகன் தேசுடைய குன்றைநகர்
ஊரடிகள் போந்தார் உலா. –206

குன்றை அடிகளார் கோலஉலாத் தான்போந்தார்
என்றும் தமிழ்அறிவீர் இன்பமுடன் – நன்றாய
தேரேறு வீதித் திருத்தொண்டர் தாள்பணிக
ஊராரே காண்பீர் உலா.

அடிகளார் திருவுலா நிறைவுற்றது.

---

